உ
சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத்திங்கள் இதழ்

மலர் 14 ] ஏப்ரல்-மே, 1999 [ இதழ் 10

பெருமைதரு ஆசிரியர், ''திருமுறைக்காவலர்''
M. கண்ணப்ப செட்டியார்,
(திருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)






1999
ஏப்ரல்
மலர் 14
இதழ் 10

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

## நமது சிந்தனைக்கு

### 'நலியார் நமன் தமரே'

ஊனாய்உயிர் புகலாய்அக லிடமாய்முகில் பொழியும்
வானாய்வரு மதியாய்விதி வருவான் இடம் பொழிலின்
தேன் ஆதரித்(து) இசைவண்டினம் மிழற்றுந் திருச்சுழியல்
நானாவிதம் நினைவார்தமை நலியார்நமன் தமரே,

—சுந்தரமூர்த்தி நாயனார்

உயிர்களின் சரீரங்களாகிய எல்லா ஜீவராசிகளுக்கும் புகலிடமாயும், பரந்த இவ்வுலகமாகியும், மேகங்கள் மழை பொழிதற்கு இடமான ஆகாசமாகியும், அதில் தோன்றும் கலைகள் நிறைந்த பூர்ண சந்திரனாகியும் அவரவர்க்குரிய மெய்ப்பொருளாயும் இருக்கின்ற பெருமானுக்குரிய இடமான, சோலைகளிலே இனிய தேனை விரும்பி நல்ல கீதத்தை உடைய வண்டுக் கூட்டங்கள் ரீங்காரம் செய்கிற திருச்சுழியலைப் பலவகையில் நினைப்பவர்களை யம தூதர்கள் வருத்தமாட்டார்கள். திருச்சுழியலை உண்மையுடன் வழிபடுவோர்க்கு யமபயமில்லை.

---

அறிவாற்றலால் கடவுளை அறிய இயலாது. ஆன்மீக சக்தியால் அவரை உணரலாம்.

—அரவிந்தர்

# நன்றுடையான் - தீயதில்லான்

**(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்)**

''தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது''

['நன்றுடையானை' என்று தொடங்கும் திருஞானசம்பந்தரின் தேவாரத்தை அழகுறவிளக்கி, அதுவே ஆசீர்வாதமாகத் திகழ்வதையும் புலப்படுத்தி, உலகமே ஆண் பெண் பகுப்புடையதாக விளங்குவதை எடுத்துக்காட்டி நுட்பமான சிந்தனைகளைத் தோற்றுவிக்கும் சிறப்பினை இக்கட்டுரைக்கண் காண முடிகிறது].

**ஆசீர்வாதமாவது யாது?**

திருஞானசம்பந்த சுவாமிகள் 1300 ஆண்டுகளுக்கு முன் இங்கே எழுந்தருளியிருக்கும் பெருமானைத் தரிசித்துப் பாடியுள்ளார். அவர் அருளிய பதிகத்தின் ஒரு பாட்டு அனைவருக்கும் பொருத்தமான ஆசீர்வாதமாக அமைகிறது. நல்ல கருத்துக்களை நம் உள்ளத்தில் பதியவைப்பதே ஆசீர்வாதம். உயிர்கள் உய்திபெற்று வளர்வதற்கான நல்ல உணர்வுகளைக் கூறும் இத்தலத் தேவாரப் பதிகத்தின் முதற்பாடலில் ஞானசம்பந்தர் இரண்டு விஷயங்களை நமக்காக அருளிச்செய்துள்ளார். இறைவனை எத்துணை முயன்றாலும் நாமே சென்று அடைவது என்பது முடியாது. 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்பார் மாணிக்கவாசக சுவாமிகள். இக்கருத்தையே ஞானசம்பந்தப் பெருமானும்.

''நன்றுடையானைத் தீயதில்லானை நரைவெள்ளேறு
ஒன்றுடையானை யுமைபொரு பாக முடையானைச்
சென்றடையாத திருவுடையானை சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன் உள்ளம் குளிரும்மே''

---

ஆன்மா அமரன். அவனை எவராலும் கொல்லவோ அழிக்கவோ முடியாது.

சாக்ரட்டீஸ்

என்று அருளிச்செய்கிறார். இப்பாடலில் திருஞானசம்பந்தர் அருளி யிருககும் ஆசீர்வாதத்தைப் புரிந்துகொள்வதே இவ்வரவேற்பிற்குப் பயனாக அமையுமென்று கருதுகிறோம்.

**அறவடிவினன் இறைவன் :**

இறைவன் நன்மையே நிறைந்தவன் - தீமையே இல்லாத தன்மையன். மனிதர்களில் நன்மையே நிறைந்தவர்கள் எவரும் இலர். தீமையே செய்யாதவர்களும் உலகில் இல்லை. வெளிப்படை யாகச் சிலரிடம் தீமை தெரிவதில்லை. பேச்சிலும், செயலிலும் தீமை காணப்பட்டால் அதனைத் தண்டிக்கச் சட்டங்கள் இருக்கின்றன. நெஞ்சால் தீமை நினைப்பாரைத் தண்டிக்க முடியாது. நமது முன் னோர்கள் சமயம் - சமயம் என ஒன்று வைத்துக் கடவுள் - கடவுள் என்று கூறுவதெல்லாம் நம் இந்நெஞ்சத் தீமையை மாற்றி உய்தி பெறுவதற்கேயாகும்.

நன்றுடையானாகத் - தீயதில்லானாகப் பெருமான், நாம் கண்டு வழிபடற்கென்றே-சிராப்பள்ளிக் குன்றுடையானாக எழுந் தருளியுள்ளான் என்கின்றார் ஞானசம்பந்தர். அவன் அறமே வடி வினாக - தீமையற்றவனாக விளங்குகின்றான் என்பதற்கு அவன் வாகனமாக இவர்ந்துவரும் காளையே சான்றாகும். அறமே வடிவ மான காளை அவனுக்கு வாகனமாக அமைவதோடன்றி அவன் கொடியிலும் இடம்பெற்றது. இவ்வுயர்ந்த தத்துவத்தை நமக்கு அறிவுறுத்தவே 'நரைவெள்ளேறு ஒன்றுடையான்' எனப் பிள்ளை யார் குறித்தருளுகின்றார்.

**ஆண் பெண் பகுப்பு :**

உலகம் முழுவதும் ஆணும் பெண்ணுமாக விளங்குவதை ஊடுருவிப் பார்ப்பவர்கள் நன்கு அறியமுடியும். எல்லார் உடலிலும் ஆண் பெண் கூறுபாடு உண்டு. வலப்பாகம் ஆண் தன்மை உடையது; வலியது. இடப்பாகம் பெண்மைக்குரியது. மென்மையானது. இதனை நாம் சிறிதும் உணர்வதில்லை. மின்சாரத்தில் கூட இவ்விரு திறமும் இருக்கிறது. இதனையே 'Passitive' என்றும் 'Negative' என்றும் கூறுகின்றனர். தமிழில் பாயும் சக்தி என்றும் தாங்கும் சக்தி என்றும் இவற்றை விளக்குவர். இவ்விரண்டு சக்திகள் இல்லாமல் உலகம்

---

ஆன்மாவின் வழி நடந்தால் அதுவே கடவுளின் வழி.

– மாக்ஸிம் கார்க்கி

இல்லை. ஓர் இரும்பினை வெட்டவேண்டுமானால் ஒரு பட்டடையின்மேல் வைத்து வெட்டுகிறோம். அங்கே பட்டடை. தாங்கும் சக்தி, மேலிருந்து அடிக்கப் பயன்படும் சுத்தி, பாயும் சக்தியாக, அமைகிறது. பெரிய பொருளை எடுக்க இரு கைகள் தேவைப்படுகின்றன. சிறிதாயினும் இருவிரல் சேர்ந்தே ஒன்றினைப் பற்ற இயல்கிறது. சைவ- சித்தாந்தம் மூன்று பொருள்களைச் சிறப்பாக விளக்குகிறது. பதி, பசு, பாசம் என்பன அவை. இவற்றையே கடவுள். உயிர், தளை என்றும் கூறலாம். இம் மூன்று பொருள்களும் ஆண் பெண் என்ற பாகுபாட்டோடு விளங்கி நிற்பதனை ஆழ்ந்து நோக்குபவர்கள் கண்டுகொள்ள முடியும். கடவுள் சிவசக்தியாக விளங்குகிறார். உயிர்கள் ஆண் - பெண் எனப்பாகுபட்டு நிற்கின்றன. தளை எனப்படும் அறிவற்ற ஜடம் தாங்கும் சக்தி-பாயும் சக்தி என இரு கூறுபட்டு விளக்குகிறது. இவ்வுண்மைகளை எல்லாம் ஆய்ந்தறிந்தே ஞானசம்பந்தர் இத்தலத்திறைவனைப் பாடும்போது 'உமையொரு பாகம் உடையான்' என விளக்கிச் செல்கிறார்.

**கருணை வெளிப்பாடு :**

அடுத்து ஞானசம்பந்தர் 'சென்றடையாத திருவுடையான்' என இறைவனைக் குறித்தருளுகின்றார். ஆணவ முனைப்பாலோ, உடல் வலியாலோ – அறிவுத் திறத்தாலோ இறைவனைச் சென்றடைதல் என்பது முடியாது. அவன் அருள் இருந்தாலன்றி உயிர்கள் தாமே முயன்று அவன் திருவடிகளைச் சேர்வதென்பது இயலாது. அவ்வருள் எல்லார்க்கும் ஒரு சேரக் கிடைத்துவிடும் என்பதில்லை. உயிர்களின் பக்குவம் அறிந்து இறைவன் அருள் செய்கின்றான். குழந்தையின் தேவையை உணர்ந்து அதற்கு வேண்டுவனசெய்யும் தாய்தந்தையரைப் போன்று இறைவனது கருணையும் வெளிப்படுகிறது. சிலவற்றைச் சிலருக்கு இறைவன் தராமைக்குக்காரணம் அவ்வுயிர்கள் பக்குவப்படாமையே ஆகும். நம்முடைய குறைகளையும் குற்றங்களையும் உணரத்தக்க நிலையில் நாம்இல்லை. இதனால்தான் இறைவனது அருளிப்பாட்டினை நம்மால் முற்றும் உணர்ந்துகொள்ள முடியவில்லை. இவற்றையெல்லாம் உளங்கொண்டே 'சென்றடையாத திருவுடையான்' என ஞானசம்பந்தர் குறித்தருளுகிறார். எனவே, இத்திருப்பாடலிலிருந்து ஞானசம்பந்தர் அருளும் ஆசீர்வாதமாக நாம் கொள்ளத்தக்கது மனிதர்களுள் தீமையே அற்ற நன்றேயுடையவர்கள் எவருமிலர்

---

எது இன்னதென்று சொல்ல முடியாதோ அது தான் மாயை

**- வடமொழி சுலோகம்**

என்பது ஒன்று; பிறிதொன்று, இறைவன் உயிர்களின் பக்குவ மறிந்து அருள் செய்தாலல்லது உயிர்கள் தாமே அவன் அருளை அடைய முடியாது என்பது. இந்த இரண்டு செய்திகளும் நமக்குப் புரிந்துவிடுமானால், உலகியல் குழப்பங்கள் யாவும் தீர்ந்துவிடு மென்பது உறுதி.

**உள்ளக்குளிர்ச்சி :**

ஒரு நல்ல மனிதரைப்பற்றிப் பேசுவது, நினைப்பது, விழா எடுப்பது யாவுமே மனதிற்குக் குளிர்ச்சி தருவனவாகும். தீயோர்களுக்குச் செய்வதோ நெஞ்சில் எரிச்சலை விளைவிக்கும் என்பது உலகியற்கையாகும். இவற்றை எல்லாம் உள்ளடக்கியே 'சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூற என் உள்ளம் குளிரும்' என்றார். இறைவன் புகழைப் பேசுவதும் - சிந்திப்பதும் நெஞ்சிற்குக் குளிர்ச்சி தரும் என்பதைச் சொல்லால் விளக்க முடியாது; அனுபவத்தால்தான் உணரமுடியும்.

**நல்லோர் கடன் :**

தீயோர்களிடமிருந்து நல்லோர்களைக் காப்பாற்றவேண்டுவது நல்லவர்கள் அனைவருக்கும் இன்றியமையாக் கடமையாகும். இதனைச் செய்யாவிடில் நான்கு தீயவர்களால் நாலாயிரம் நல்லவர்களுக்குத் தீங்கு நேரும்; அவர்களைத் திருத்தி நல்லவர்க ளாக்க வேண்டுவதும் தேவையேயாகும். காவிரியோடு சாக்கடை கலக்கிறது. காவிரி தன் தூய்மையால் சாக்கடையின் தன்மையை மாற்றிப் புனிதமாக்கி விடுகிறது. நல்லவர்களைத் தீயவர்கள் கெடுக்கமுடியாது என்பது இதனால் நன்கு விளங்குகிறது.

**அர்ச்சகர் நிலை :**

சிவாசாரியர்கள் சார்பில் இங்கே வரவேற்பளிக்கப்பட்டது. ஆரம்பக் காலத்தில் தொண்டாகத் தொடங்கியன யாவும் பிற்காலத்தில் தொழிலாக மாறிவிட்டன. வழக்குறைஞர் தொழிலும் ஆரம்பக் காலத்தில் தொண்டாகத் தொடங்கியது தங்கள் தொழிலுக்காக அவர்கள் ஊதியம் பெறுவதில்லை. அணிந்திருக்கும் பெரிய மேலங்கியின் பின் பக்கம் ஒரு பை இருக்கும். கட்சிக்காரர்கள் விரும்பினால் சிறிது தொகையை

---

கடவுள் சித்தப்படி நடப்பவன் கடவுள் அருள் பெறுவான்.

-இயேசு

அப்பையுள் போட்டுவிட்டுப் போவது வழக்கமாக இருந்துவந்தது. இன்றோ அத்தொழில் வருமான நோக்கம் கொண்டதாக மாறி விட்டது. அதுபோலவே திருக்கோயில்களில் அர்ச்சிக்கும் சிவாசாரியர்களும் தொண்டாகத் தொடங்கியது தற்போது தொழிலாக மாறிவிட்டது. தத்துவ ரீதியில் கோயில்களில் இறைவன் திருமேனியைத் தீண்டி அர்ச்சிக்கும் சிவாசாரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கக்கூடாது 'பிராமணன் சம்பளம் வாங்கினால் பிராமணத் துவமும் ஆசார்யத்துவமும் போய்விடும்' என்று ஒரு நீதி சுலோகம் கூறுகிறது. அவர்களது உலகியல் வாழ்விற்குத் தேவையானவற்றை உணர்ந்து மக்கள் அவர்களுக்குக் காணிக்கையாக வழங்கவேண்டும். சிவாசாரியர்கள் பட்டினி கிடப்பது கூடாது. அவர்கள் வளமாக வாழ பக்தர்களும், நிர்வாகிகளும் நன்கு போற்றுதல் வேண்டும். இருசாராரும் கடமையுணர்ச்சியோடு கூடிய தகுதியுடையவர்களாக இருத்தல் அவசியம்.

**கடமைப் பகுப்பு :**

மக்கள் பணியும் இறைவன் பணியும் ஒன்றே என்று சொல் கின்றனர். இதற்குப் பொருள் என்ன? அவரவர்களும் தத்தமக் குரிய பணிகளை ஒழுங்காகச் செய்யவேண்டும் என்பதேயாகும். ஆண்டவன் நேரே ஒவ்வொன்றுக்கும் வந்து அருள்செய்வான் என் பதில்லை. ஆற்று நீர் வாய்க்கால்வழி வந்து சிறு கிளைகளாக ஓடி மடைவழியாக வயலுள் பாய்வது போல, அவரவர்களும் இயற்றும் கடமை வழியே இறைவன் அனைத்துயிர்களுக்கும் அருள்கின்றான். ஒவ்வொருவரும் தத்தமக்கு இயன்றவகையில் கடமையாற்ற வேண் டும். எல்லோரும் ஒழுங்காகக் கடமையைச் செய்தால் சுபிட்சமாக இருக்கலாம். இதுவே 'சோஷலிசம்'. கடமையில் கடவுள் இருக் கிறான். இதனையே நமது புராண இதிகாசங்கள் கதைகளாகக் கூறுகின்றன. ஆனால், அதன் உட்பொருளை நாம் உணர்ந்து கொள்வதில்லை. அகத்தியர் இறைவன் திருமணக் காலத்தில் தென்னாட்டிற்குச் செல்ல இறைவன் இருந்த இடத்தில் மணக்கோலம் காட்டியதும் இதற்குச் சான்று பகர்வனவாகும். பணி யாதாயினும் அதன் மாட்டுச் சிறுமையில்லை. எல்லாப் பணிகளையும் செய்த காந்தியடிகள் பெருமை பெற்றார். பெண்களைப் பொறுத்தவரை கணவன் பணியே அவர்களுக்குக் கடவுள் பணியாகும் என்கிறார் திருவள்ளுவர்.

---

தமக்கு நல்லது என்று கருதாததைப் பிறருக்குச் செய்யா திருப்பவரே சான்றோர் ஆவார்.

— ஜராதுஷ்டிரர்

கருணை வெள்ளம் :

இறைவன் நுட்பமாக - கண்ணுக்குத் தெரியாத நிலையில் இருந்து அருள்கிறான் நாம் செயலற்று இயலாத நிலை அடையும் போது இறைவன் முற்பட்டுக் காத்தருளுகிறான். இறைவன் தந்த உடல் இரும்பினும் வலியது. இரும்பு கூட சில ஆண்டுகளுள் துருப்பிடித்துக் கெடுகிறது. பல்லாயிரக்கணக்கான நுண் அணுக் களால் இவ்வுடல் உள்ளிருந்து இயக்குபவன் இறைவன். தாயாகவும் எழுந்தருளிவந்து அருள் வழங்கும் பெருமான் இறைவன். கடமை யுணர்வும் பக்தியும் இருக்குமானால் பள்ளத்தை நோக்கிப் பாயும் தண்ணீர்போல இறைவனது கருணைப் பெருவெள்ளம் நம்மிடம் பாய்ந்தோடிவரும்.

—நன்றி 'திருவருட் செய்தி'

---

தலவரலாறு

## திருக்கடம்பந்துறை

### (கடம்பர் கோயில், குழித்தலை - குளித்தலை)

சோழநாட்டுத் தென்கரைத் தலம். தற்போது கடம்பர்கோயில், குழித்தலை, குளித்தலை என வழங்கப்படுகிறது. கல்வெட்டில், 'குளிர்த் தண்டலை' என்று காணப்படுகிறது. புகைவண்டி நிலையம். திருச்சி, ஈரோடு பாதையில் உள்ளது. கண்வ முனிவருக்கு இறை வன் கடம்ப மரத்தில் காட்சி தந்த தலம்.

இறைவன் - கடம்பவனேஸ்வரர், கடம்பவன நாதர்.

இறைவி - பாலகுஜாம்பாள், முற்றிலாமுலையாள்.

தலமரம் - கடம்பு.

தீர்த்தம் - அருகில் உள்ள காவேரி.

அப்பர் பாடல் பெற்றது.

கோயிலுள் நுழையும் போது வலப்புறம் அம்பாள் சந்நிதி உள்ளது. இதைத் தாண்டித்தான் மூலவரைத் தரிசிக்கச் செல்ல வேண்டும். மூலவர் அழகான சிவலிங்கத் திருமேனி, சப்த கன்னி கைகளின் பிரமஹத்தி தோஷம் நிவர்த்தியான தலம் இதுவாதலின், மூலவர் பின்னால் சப்தகன்னிகைகளின் உருவங்கள் கல்லில்பிம்ப மாகச் செதுக்கப்பட்டுள்ளன. விநாயகப் பெருமான் இடம்மாறி, மறு கோடியில் உள்ளார். உள் பிராகாரத்தில் அறுபத்து மூவருடைய மூல, உற்சவத் திருமேனிகள் உள்ளன. இத்திருக்கோயிலில் இரு நடராஜ வடிவங்கள் உள்ளன. ஒன்றில் முயலகன் இருக்க, மற்றொன் றில் இல்லை. 1966-ல் கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது.

---

சரித்திரத்தை உண்டாக்கும் மனிதர்களுக்கு அதை எழுத நேரம் கிடைப்பதில்லை. - மெட்டர்னிக்

# பதிகப் பெருவழி—65

## திருக்கடம்பந்துறை

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியது

திருச்சிற்றம்பலம்

முற்றி லாமுலை யாளிவ ளாகிலும்
அற்றம் தீர்க்கும் அறிவிலள் ஆகிலும்
கற்றைச் செஞ்சடை யான்கடம் பந்துறைப்
பெற்றம் ஊர்திஎன் றாள்எங்கள் பேதையே. 1

உமாதேவியை உடனாகக் கொண்டு விளங்குபவர் சிவபெருமான். அப்பெருமாட்டி மிகவும் இளமையுடையவளாய்மேவுபவள். அப்பெருமான், கற்றையாக உள்ள செஞ்சடையுடையவராகிக் கடம்பந்துறையில் இடபத்தை வாகனமாகக் கொண்டு விளங்குபவர்.

தனகு இருந்ததொர் தன்மையர் ஆகிலும்
முனகு தீரத் தொழுதெழு மின்களோ
கனகப் புன்சடை யான்கடம் பந்துறை
நினைய வல்லவர் நீள்விசும்பு ஆள்வரே. 2

நீங்கள் உள்ளத்தில் களிப்பு உடையவராக இருந்தாலும், வினையானது தீரும் தன்மையில் ஈசனைத் தொழுது ஏத்துவீராக. பொன் போன்ற சடைமுடியுடைய சிவபெருமான் விளங்கும் கடம்பந்துறையை நினைத்து ஏத்த வல்லவர்கள், தேவலோகத்தில் மகிழ்ந்து மேவும் சிறப்பினை அடைவார்கள்.

ஆரி யம்தமி ழோடிசை யானவன்
கூரி யகுணத் தார்குறி நின்றவன்
காரி கையுடை யான்கடம் பந்துறைச்
சீரி யல்பத்தர் சென்றடை மின்களே. 3

---

பெருமை நிரம்பிய மனிதர்களே மனித சமுதாயத்தின் மைல் கற்கள்

- மாஜினி

ஈசன், வடமொழியும் தென் தமிழ்த் தோத்திரங்களும் ஆகிய இசையாகத் திகழ்பவர். அப்பெருமான், சாத்விக குணம் பொருந்திச் சிவ சிந்தனையில் மேவும் ஞானியர்களுடைய அரும் சொல்லாக விளங்குபவர்; உமா தேவியை உடனாகக் கொண்டு திகழ்பவர். அவர், வீற்றிருக்கும் கடம்பந்துறையை நாடிச் சென்று, பக்தர்கள் வழிபட்டு நற்பேறுகளை அடைவார்களாக.

பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனை
வண்ண நன்மல ரான்பல தேவரும்
கண்ண னும்அறி யான்கடம் பந்துறை
நண்ண நம்வினை யாயின நாசமே. 4

சிவபெருமான், பண்ணோடு வழங்கும் இனிய தோத்திரப் பாடல்களைச் செவி மடுக்கும் இயல்புடையவர்; தாமரை மலரின்மீது விளங்கும் பிரமனும், திருமாலும், பற்பல தேவர்களும் காண்பதற்கு அரியவர். அப்பெருமான் வீற்றிருக்கும் கடம்பந்துறையை நண்ணி வணங்க, நம் வினைகள் யாவும் விலகிச் செல்லும்.

மறைகொண் டம்மனத் தானை மனத்துளே
நிறைகொண் டந்நெஞ்சி னுள்ளுற வைம்மினோ
கறைகண் டன்னுறை யும்கடம் பந்துறை
சிறைகொண் டவ்வினை தீரத் தொழுமினே. 5

சிவபெருமான், வேதத்தின் கருத்தினைக் கொண்டு, எஞ்ஞான்றும் வியாபித்த திருக்குறிப்பு உடையவர். அப் பரமனை நிறைவு கொண்டவராய் நெஞ்சில் பதியுமாறு அன்புற ஏத்தி விளங்குவீராக. நீலகண்டராக மேவும் அப்பெருமான், கடம்பந்துறையில் வீற்றிருப்பவர். அவரைக் கைதொழுது ஏத்த, வினையாவும் தீரும்.

நங்கை பாகம்வைத் தந்நறும் சோதியைப்
பங்கம் இன்றிப் பணிந்தெழு மின்களோ
கங்கைச் செஞ்சடை யான்கடம் பந்துறை
அங்கம் ஓதி அரன்உறை கின்றதே. 6

---

மரணத்தைத் தவிர மருந்தில்லா நோய் ஒன்றுமே இல்லை.

—முகம்மது நபி

சிவபெருமான், உமாதேவியைத் தமது திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு விளங்குபவர்; நறுமணம் கமழும் சோதி வடிவானவர்; அப்பரமனைக் குறைவின்றி பணிந்து ஏத்துவீராக. அப்பெருமான், கங்கையைச் செஞ்சடையில் ஏற்றுக் கடம்பந்துறையில் வீற்றிருப்பவர். வேதத்தின் அங்கங்களை ஓதியருளிய அப் பரமன் உறைகின்ற இடம், அதுவே.

அரிய நான்மறை ஆறங்க மாய்ஐந்து
புரியன் தேவர்கள் ஏத்தநஞ் சுண்டவன்
கரிய கண்டத்தி னான்கடம் பந்துறை
உரிய வாறு நினைமட நெஞ்சமே. 7

சிவபெருமான், அரியதாகிய நான்கு வேதங்களாகவும், ஆறு அங்கங்களாகவும், ஐந்து வேள்விகளாகவும் திகழ்பவர்; தேவர்களின் வேண்டு கோளை ஏற்று நஞ்சினைக் கண்டத்தில் தேக்கிக் காத்தருள் புரிந்தவர்; அப்பெருமான், வீற்றிருக்கும் கடம்பந்துறையை, நெஞ்சமே! உரியவாறு நினைத்து ஏத்துவாயாக.

பூமென் கோதை உமையொரு பாகனை
ஓமம் செய்வது உணர்மின்கள் உள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாமம் ஏத்தநம் தீவினை நாசமே. 8

பூப்போன்ற மென்மையுடைய உமா தேவியை ஒரு பாகமாகக் கொண்டு விளங்கும் ஈசனை, வேள்வி கொண்டு ஏத்தி உள்ளத்தால் நினைத்து வழிபடுக. மன்மதனை எரித்த அப்பெருமான் வீற்றிருக்கும் கடம்பந்துறையைப் பரவியும் அவன் திருநாமத்தை ஓதியும் வழிபட நம் தீவினை யாவும் நீங்கும்.

பார ணங்கி வணங்கிப் பணிசெய
நார ணன்பிர மன்அறி யாததோர்
கார ணன்கடம் பந்துறை மேவிய
ஆர ணங்கொரு பாலுடை மைந்தனே. 9

---

கடந்த காலக் கவலைகளை மறந்துவிடு. இன்றைக்கு ஏற்றபடி வாழ்

—எபிக்யூரஸ்

திருமாலும் பிரமனும் பாரில் அணைந்து ஏத்தியும் அறிதற்கு அரிய காரணகர்த்தராக விளங்கும் ஈசன், கடம்பந்துறையில் உமா தேவியை உடனாகக் கொண்டு விளங்குபவர். அப்பெருமானை ஏத்துக

**நூலால் நன்றா நினைமின்கள் நோய்கெடப்**
**பாலான் ஐந்துடன் ஆடும் பரமனார்**
**காலால் ஊன்றுகந் தான்கடம் பந்துறை**
**மேலால் நாம்செய்த வல்வினை வீடுமே. 10**

திருச்சிற்றம்பலம்

ஈசனை, சிவாகம விதிப்படி நினைத்து ஏத்துமின்; பிறவி நோய் கெடப் பஞ்சகௌவியத்தால் பூசனை ஆற்றுமின். அப்பெருமான், இராவணனைத் திருப்பாதத்தால் ஊன்றி அடர்த்தி அருள் புரிந்து உகந்து கடம்பந்துறையில் விற்றிருப்பவர். அப்பரமனை ஏத்த நமது வல்வினை யாவும் நீங்கும்.

## சித்திரை மாத அடியவர் வழிபாடு

### தில்லை வாழ் அந்தணர் (14—4—99)

ஆதியாய் நடுவுமாகி அளவிலா அளவுமாகிச்
சோதியா யுணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்
பேதியா வேகமாகிப் பெண்ணுமா யாணுமாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி

தில்லை நடராசப் பெருமான் தங்களது வாழ்வளிப்பவர் என்ற உறுதியைக் கைவிடாது வாழ்ந்து காட்டுபவர்கள் தில்லை வாழந்தணர். அவர்களது இறை பக்தியும், மனஉறுதியும் யாவர்க்கும் வழிகாட்டியாகும். அவர்களை சித்திரைத் திங்கள் முதல் நாளில் சிந்திப்பது நலம் பயக்கும்.

---

பண்பு நலம் ஏற்படுவதை நோக்கமாகக் கொண்டது கல்வி.
— ஹெர்பர்ட் ஸ்பென்பெர்

## சிறுத் தொண்ட நாயனார் (17—4—99)

''உள்ளநிறை கலைத்துறைக ளொழிவின்றிப் பயின்றவற்றாற்
றெள்ளி வடித் தறிந்த பொருள் சிவன் கழலிற் செறிவென்றே
கொள்ளுமுணர் வினின் முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாயென்றும் பயின்று வரும் பண்புடையார்''

சிவவேடத்திருந்த பெருமதிப்பினால் பைரவக்கோலத்திலிருந்த சிவனடியாருக்கு உணவளிக்க தனது மகனது உடற்கறியளிக்கத் தயங்கவில்லை. இத்தகைய உயர்ந்த சிவத்தொண்டு வேறுயாரால் செய்ய இயலும்? சிறுத் தொண்ட நாயனார் குருபூசைநாள் சித்திரைத் திங்கள் 'பரணி' நன்னாள்.

## மங்கையர்க்கரசியார் (19—4—99)

''மங்கையர்க்குத் தனியரசி யெங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக் கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர் குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள் பிரான் சண்பையர்கோ னருளினாலே
இருந்தமிழ் நாடுற்றவிடர் நீக்கித் தங்கள்
பொங்கொளி வெண்டிரு நீறு பரப்பினாரைப்
போற்றுவார் கழலெம்மால் போற்றலாமே''

மங்கையர்க்கரசியார் சோழர்குல மன்னவனின் மகள். சைவ சமயத்தைச் சார்ந்தவருக்கு சமண சமயத்தில் இருந்த நின்றசீர் நெடுமாறனாகிய பாண்டிய வம்சத்தவர் கணவனாக அமைந்தவர். திருஞானசம்பந்தரின் துணைக்கொண்டு பாண்டிய நாட்டில் சமணத்தை அகற்றி சைவசமயம் பரவ வழிசெய்தார். குருபூசைநாள் சித்திரைத் திங்கள் 'ரோகிணி' நன்னாள்.

## விறன்மிண்ட நாயனார் (21—4—99)

''வாரி சொரியுங் கதிர்முத்தும் வயன்மென் கரும்பிற் படுமுத்தும்
வேரல் விளையுங் குளிர்முத்தும் வேழமருப்பி னொளிர் முத்தும்
'மூரலெனச் சொல் வெண்முத்த நகையார்' தெரிந்துமுறை கோக்குஞ்
சேரர் திருநாட்டூர்களின் முன்சிறந்த மூதூர்செங்குன்றூர்''

---

புத்தகமே இல்லாத வீடு, ஜன்னலே இல்லாத அறைக்கு ஒப்பாகும்.

—மான்

செங்குன்றூரைப் பிறப்பிடமாகக் கொண்டு திருவாரூரில் வாழ்ந்தவர் விறன்மிண்டர். திருக்கோயில் தேவாசிரிய மண்டபத்தில்சிவனடியார் கூட்டத்திலிருந்தபோது, திருவாரூர்ப்பெருமானை வழிபடச்சென்ற சுந்தரருக்கு சிவனடியார்களாகிய திருத்தொண்டர் பெருமையை உலகிற்குணர்த்தக் காரணமாயிருந்தவர் விறன்மிண்டநாயனார் குருபூசை நாள் சித்திரைத் திங்கள் 'திருவாதிரை' நன்னாள்.

## இசைஞானியார் (29—4—99)

''பயந்தாள் கறுவுடைச் செங்கண் வெள்ளைப்பொள்ளல்
நீள்பனைக்கைக்
கயந்தான் உகைத்தநற் காளையை என்றுங் கபாலங்கைக் கொண்
டயந்தான் புகும் அரன் ஆரூர்ப்புனித அரன்திருத்தாள்
நயந்தாள் தனதுள்ளத் தென்றும் உரைப்பது ஞானியையே''

சுந்தரமூர்த்தி நாயனாரைப் பெற்ற மாதவமுடைய அன்னை இசைஞானியாராவார். அவரது குருபூசை நாள் சித்திரைத் திங்கள் சித்திரை நன்னாளாகும்.

## திருக்குறிப்புத் தொண்ட நாயனார் (30—4—99)

''கந்தைபுடைத் திடதெற்றுங் கற்பாறை மிசைத் தலையைச்
சிந்தஎடுத் தெற்றுவன் என்றணைந்து செழும் பாறைமிசைத்
தந்தலையைப் புடைத்தெற்ற அப்பாறை தன்மருங்கு
வந்தெழுந்த பிடித்ததணிவளைத் தழும்பர் மலர்ச்செங்கை''

காஞ்சிபுரத்தில் தனது தொழிலாகிய சலவைத் தொழிலை செவ்வையாய் நடத்தி வந்தவர் திருக்குறிப்புத் தொண்டர். அத்தொழிலின்போது வரும் சிவனடியார்களுக்கு அவர்களது உடையில் அழுக்கு நீக்கிக் கொடுக்கும் சிவத்தொண்டு செய்து இறைவனது கருணையைப் பெற்றவர். குருபூசைநாள் சித்திரைத் திங்கள் சுவாதி நன்னாள்

## திருநாவுக்கரசு நாயனார் (10—5—99)

'திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மை திகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகிறேன் பேருலகில்
ஒரு நாவுக்குரைசெய்ய ஒண்ணாமை யுரைத்தேன்'

---

நம்மை மோசம் செய்யாத நண்பர் புத்தகம் —பிரான்ஸ்

'நால்வர்' என்ற பெருமைக்குரியவர்கள் 'திருஞானசம்பந்தர்' 'திருநாவுக்கரசர்' 'சுந்தரமூர்த்தியார்' 'மாணிக்கவாசகர்'. சைவ சமய வழிபாடுகள் தளர்ச்சி அடையும் நிலை தோன்றினால் அருளாளர்கள் தோன்றியுள்ளார்கள் என்பது வரலாறு. பல்லவ மன்னர்களினால் சமண சமயம் எழுச்சி பெற்றபோது, சைவ சமயம் நிலை பெற்றிட சிவபெருமானால் அவதரிக்கச் செய்த அருளாளர் ''திருநாவுக்கரசர்'' சிவபெருமான் அவ்வருளாளர்க்குத் தோன்றாத் துணையாய் உடனாயிருப்பவர் என்பதை திருநாவுக்கரசரை சுண்ணாம்புக்காளவாயிலில் அடைத்தது, நஞ்சுகலந்த அமுதைக் கொடுத்தது, யானையை ஏவி கொல்ல முயற்சித்தது, இத்தனையும் ஏவிய பல்லவ அரசன் திருநாவுக்கரசர் திருவடியில் சரணடைந்தது, ஆகிய வரலாற்றுச் செய்திகள் நிரூபிக்கின்றன. திருநாவுக்கரசர் அருளிய தேவாரப் பாடல்கள், இச்செய்திகளைக் கூறுவதோடு தான் 'உழவாரப்'பணி புரிந்ததையும் அறிவிப்பதோடு, சிவபெருமான் திருவருள் இல்லையெனில், உன்னால் 'சிவனைப் பற்றி' சிந்திக்கக் கூட இயலாது என்பதைத்திட்டவட்டமாக, தன்னை உதாரணமாகக் காட்டி 'நம்பன் அருளாமையினால்'எனக்கூறி, தான் 60ஆண்டுகள் வாழ்ந்தபின்புதான் சிவபெருமானைச் சிந்தித்து, புகழ்ந்து பாடி, வாழ்த்தி, வணங்கும் பேறு பெற்றதாகக் கூறுகிறார். அதே அறிவுரையை, நம்போன்றோர்க்கும் கூறுவதோடு, 'நம்பர்' அருள் பெறுவதற்குரிய தொண்டு நெறியை வலியுறுத்தியுள்ளார். அவர் தேவாரங்களை ஓதுவோம் பணி செய்வோம். நாவரசர் குருபூஜை சித்திரைத் திங்கள் சதய நாளாகும்.

C.S சொக்கலிங்கம்

---

## வாழ்க மணமக்கள் !

ஒக்கூர் ஆ.த.மா. சுந்தரம் செட்டியார் மகள் செல்வி அபிராமி, கண்டரமாணிக்கம் பழ. அரு. முருகப்பன் அவர்களின் மகன் செல்வன் சோமு இவர்களின் திருமணம் 19-3-99 அன்று சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் நீடு இனிது வாழ உழவாரம் வாழ்த்துகிறது.

☆ திருவாவடுதுறை ஆதீனப் புலவர் திரு ஆதி. முருகவேள் அவர்களின் இளையமகன் மு. மெய்கண்டான் செல்வி பி. சந்திரா ஆகியோர் திருமணம் 19-3-99 அன்று தூத்துக்குடியில் சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் எல்லா நலன்களும் பெற்று வாழ உழவாரம் வாழ்த்துகிறது.

---

வாழ்க்கை வரலாறுகளில் சில, அறநூல்களுக்கு இணையானவை.

—ஸ்மைல்ஸ்

## கரந்தை திருமதி ஜெயகாந்தம், துரைக்கண்ணு பிள்ளை சேக்கிழார் விழா அறக்கட்டளை, சிதம்பரம் - 608 001.

நடராசப்பெருமான் திருவருள் துணையுடனும், சைவத் திரு மடங்களின் அருளாசியுடனும், திருமதி. D. ஜெயகாந்தம், திரு. K. துரைக்கண்ணுபிள்ளை ஆகியோரின் பேருதவியுடனும், நண்பர்களின் ஆதரவுடனும்.

சிதம்பரம் தவத்திரு. ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியா சாலை அறக்கட்டளை வழங்கியுள்ள சிதம்பரம் 16, ஞானப்பிரகாசம் தெரு (வடக்கு) இடத்தில் சுமார் 12 லட்சம் ரூபாய் செலவில்.

**சேக்கிழார் நினைவு மண்டபம்**

கட்டப்பட்டு வருகிறது

பிரமாதி ஆண்டு வைகாசி பூச நட்சத்திரம் (20-5-1999) வியாழக்கிழமை நன்னாளின் போது, சேக்கிழார் நினைவுமண்டபத் திறப்பு விழா செய்ய ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

இத்திருப்பணிக்கு நன்கொடை அளிக்க விரும்பும் அன்பர்கள். அதனைக் கீழே குறிப்பிட்ட முகவரிக்கு 'சேக்கிழார் நினைவுமண்டப நிதி' என்ற பெயரில் அனுப்பலாம் என்பதைத் தெரிவித்துக் கொள் கிறோம்.

செயலாளர்,
சேக்கிழார் விழா அறக்கட்டளை,
7, தெற்குத் தேர் வீதி, சிதம்பரம் - 608 001.

இங்ஙனம்
சேக்கிழார் விழா அறக்கட்டளைக் குழு

கரந்தை திருமதி. D. ஜெயகாந்தம், K. துரைகண்ணு, நியுயார்க்,
நிறுவனர்கள்

Dr. K அரங்கசாமி பிள்ளை
தலைவர்

க. சுவாமிநாதன்
செயலாளர்

R. ராமலிங்கம்பிள்ளை
துணைத்தலைவர்

Dr M.S. கோவிந்தசாமி
துணைச்செயலாளர், சென்னை

G.V. பாலதண்டாயுதம், பொருளாளர்

**உறுப்பினர்கள்**

| | |
|---|---|
| S. திருநாவுக்காசு | A சம்பந்தம் |
| S . பாலசுப்பிரமணியன் | V.S. ராமலிங்கம் |
| V S மணி, கோவை | Dr. S அருள்மொழிச்செல்வன் |
| R.K. கணபதி | C சின்ன அண்ணாமலை |

இசைக்கு எந்தச் சொற்களும் ஏற்றனவே. —பிஸான்டே

## செய்திகள்

★ காஞ்சி, சிவனடியார் திருக்கூட்டத்தினரால் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் திருக்கோயிலில் 14–3–99 அன்று உழவாரப்பணி நிகழ்த்தப்பெற்றது. ஓதுவார் பெ. சுப்பிரமணியமுதலியார் கச்சி மயானத்தில் கொடியேற்றி பணியினைத் துவக்கி வைத்தார். திருமுறை விண்ணப்பம், சமயப்பேரவை, மாகேஸ்வர பூஜை முதலியனவும் சிறப்புற நடைபெற்றன. செயலர் கன்னியப்ப உடையார், துணைத் தலைவர் நல்லி. நாராயணசாமி செட்டியார் ஆகியோர் ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்திருந்தனர்.

★ கோயில்பட்டி ஸ்ரீ அப்பர் அடிகள் திருக்கூட்டத்தின் 38 ஆவது சிவாலய உழவாரப் பணி கயத்தார் - வெள்ளாளங் கோட்டை வழியில் உள்ள திருமங்கள குறிச்சி சிவாலயத்தில் சிறப்பாக நடைபெற்றது.

★ காஞ்சிபுரம் திருமுறை மன்றத்தின் 19ஆம் ஆண்டு பங்குனி மாத வழிபாடு 21-3-99 அன்று ஐயங்கார் குளம் அருள்மிகு காமகோடி அம்பாள் சமேத கயிலாயநாதர் திருக்கோயிலில் நடைபெற்றது. ஆ. பூபாலன் திருமுறை விண்ணப்பம் நிகழ்த்தினார். சைவ சித்தாந்த ரத்னாகரம் மா. சுந்தரமூர்த்தி தலவிளக்கம் அளித்தார். கயிலாயநாதர் பதிகம் இயற்றிய ஞா. சிவலிங்கத்திற்குப் பாராட்டு வழங்கப் பெற்றது. நால்வர் நற்பணி மன்றத்தினர் மற்றும் ஐயங்கார் குள செங்குந்த மரபினர் விழா உபயமளித்தனர்.

★ மதுரை மாவட்ட ஜனகல்யாண் சார்பில் புருஷோத்தம் ஸ்கீம்பரிசளிப்பு விழா, நலிவுற்றோருக்கு உதவும் விழா, விருது பெற்ற ஆசிரியருக்குப் பாராட்டு விழா, வண்டியூர் மாரியம்மன் புகழ் மாலை நூல் வெளியீட்டு விழா, ஸ்ரீசங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஜெயந்தி விழா ஆகிய ஐம்பெரு விழாக்கள் மாண்புமிகு சட்டப்பேரவைத் தலைவர் P.T.R. பழனிவேல் ராஜன் தலைமையில் 21-3-99 அன்று நடைபெற்றது. தியாகராஜர் கல்லூரி தலைவர் டாக்டர் திருமதி. ராதா தியாகராஜன் பரிசுகள் வழங்கினார். புலவர் பு. மா. ஜெயசெந்தில் நாதன் ஜெயந்தி விழா உரை நிகழ்த்தினார். ஆனந்தா '. அமிர்தம் வரவேற்பு வழங்கினார். டாக்டர் சுப. அண்ணாமலை விருது பெற்ற ஆசிரியர்களைப் பாராட்டினார்.

---

குழம்பிய மனத்துக்கு ஏற்ற மருந்து சங்கீதம். —லத்தீன்

★ மதுரைத் தியாகராசர் கல்லூரி தமிழ்த்துறையின் சார்பில் 22-3-99 அன்று சைவசித்தாந்தச் சொற்பொழிவு நடைபெற்றது. கல்லூரித் தலைவர் டாக்டர் திருமதி. இராதா தியாகராசன் தலைமையில் திருமந்திரம் குறித்து புலவர் கண. சுப்பையா சொற்பொழிவாற்றினார்.

★ திருக்குடந்தைத் திருமுறை மன்றத்தின் 352.ஆவது கார்த்திகை சிறப்புச் சொற்பொழிவு 22-3-99 அன்று அருள்மிகு சோமேசர் கோயிலில் நடைபெற்றது. தேவ சேனாபதி என்ற பொருளில் புலவர் கை. பன்னீர் செல்வம் சொற்பொழிவாற்றினார்.

★ விக்கிரமசிங்கபுரம் சைவநெறிக் கழகத்தினர் மார்ச்மாத சனிக்கிழமைகளில் திருவருட்பயன் தொடர் சொற்பொழிவுகளை நிகழ்த்தினர். 27 3-99 அன்றுபங்குனி மாத ஆயில்யத்தை முன்னிட்டு மாதவச் சிவஞான முனிவருக்கு ஆராதனை நிகழ்த்தினர்.

★ மதுரை இந்து நாடார் பக்த சபையில் 31-3-99 அன்று 108 திருவிளக்குவழிபாடு நடைபெற்றது.திருமதிகள் V.பௌதாரணி விஜயதுரை K.L.J. உமாதேவி ஜெகதீசன் ஆகியோர் உபயமளித்தனர். தலைவர் A.P. தெய்வசிகாமணி நாடார் முன்னிலை வகித்தார். இணைச்செயலர். P A.R. அய்யம் பெருமாள் வழிபாடு ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

★ திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 22-ஆவது குருமகா சந்நிதானமாக விற்றிருந்தருளிய அருள்திரு அம்பலவாண தேசிகமூர்த்திகளின் பதினாறாவது ஆண்டு குருபூஜை விழா பங்குனி - திருவோணத்தன்று (10-4-99) சிறப்பாக நடைபெற்றது. சீர் வளர் சீர் குருமகா சந்நிதானம் அவர்கள் இரவு பூசை நிறைவில் திருமுறைப்பணியாளர் அ. இராமசாமி ஓதுவாருக்கு அருள்திரு நமசிவாயமூர்த்திகள் ஆசிக் கவசமாகப் பட்டாடைபோர்த்தி,பொற்கிழி வழங்கி ஆசியருளினார்கள். விழாவில் S. நாராயணசாமி எழுதிய சிவாலயத் திருமேனிகள் என்ற நூல் வெளியிடப்பெற்றது. நாகப்பட்டின மாவட்ட ஆட்சியர் மாண்பமை சிவதாஸ் மீனா IAS நூலினை வெளியிட சிற்பக் கலைஞர் கே. மோகன்ராஜ் முதற்படி பெற்றுக் கொண்டார்.

---

நல்ல விஷயங்களும் மிதமிஞ்சிவிட்டால் தவறாய்விடும்.

— *சர்ச்சில்*

★ காஞ்சிபுரம் தொண்டை மண்டல ஆதீன மடாலயத்தில் பன்னிரு திருமுறை விழா ஏப்ரல் 9, 10, 11, தேதிகளில் ஆதீனகர்த்தர் குருமகா சந்நிதானம் சீலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அருள் தலைமையில் நடைபெற்றது. திருமுறை விண்ணப்பம், உரையரங்கம் ஆகியன நடைபெற்றன. பேராசிரியர் வி. சா. குருசாமி தேசிகர், புலவர் சிவ. புண்ணியகோடி, புலவர் கி வச்சிரவேலு, புலவர் சீனி. மணிவண்ணன், புலவர் அ.இளங்கோவன் மு. கிருட்டினன் இ. ஆ.ப. புலவர் மு. பாலசுப்பிரமணியம், புலவர் சிவ. சதாசிவம், சரவணசதாசிவம். கவிஞர் வ.த.இராமசுப்பிரமணியம் புலவர் துரை. முருகேசன், பேராசிரியர் மா. அமிர்தலிங்கம், புலவர் மா. ஆறுமுகம், புலவர் சிவ. கன்னியப்பன், புலவர் ப. ஏலவார்குழலி புலவர் ந. தெய்வசிகாமணி, புலவர் த.கு. பத்மநாபன், புலவர் சு. முருகன், சிவ. துரைசாமி, கனக. இராமலிங்கம் கவிஞர் மு. சண்முகம், இரா. குமரகுரு, பு. மா. ஜெயசெந்தில்நாதன் மற்றும் பல அறிஞர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

★ திருவானைக்கா பன்னிரு திருமுறை வாரவழிபாட்டுக் கழகத்தின் 30 ஆவது ஆண்டு நிறைவு விழாவை முன்னிட்டு ஏப்ரல் 10, 11, தேதிகளில் திருமுறை விழா, அறுபத்து மூவர் விழா ஆகியவை சிறப்பாக நடைபெற்றன. திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் அதிபர் கயிலை மாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் விழாவிற்குத் தலைமை ஏற்றும் வாழ்த்துரை வழங்கியும், அறுபத்து மூவர் திருவீதி உலாவைத் துவக்கி வைத்தும் சிறப்பித்தார்கள். அருள்மிகு ஜம்புகேஸ்வரர் திருக்கோயில் செயல் அலுவலர் மா. மகாலிங்கம் விழா முன்னிலை வகிக்க, சிவ. வே. இராகவன், கி. சிவகுமார் டாக்டர். மு. சிவச்சந்திரன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். திருத்தணி N. சுவாமிநாதன் வீதிவுலாவில் திருமுறை இன்னிசை வழங்கினார்.

★ மதுரை தெய்வத்திரு. சுப்பிரமணியபிள்ளை, அன்னை பொன்னம்மாள் அறக்கட்டளை சார்பில் அன்னை பொன்னம்மாள் மூன்றாம் ஆண்டு நினைவுநாள் 11-4-99 அன்று அறக்கட்டளை தாரர்கள் புலவர் சு. முத்தையா கே. கோமதி அம்மாள் இல்லத்தில் நடைபெற்றது. மங்கையர்க்கரசிபள்ளிகள் & கல்லூரி தாளாளர் K. பிச்சையாபிள்ளை தலைமை ஏற்றார். நிர்வாகி திருமதி. கல்யாணி பிச்சையா சிறந்த மாணவியர்க்குப் பரிசு வழங்கினார். பொற்கிழிக்

---

இதோ ஓர் உபதேசம்; நீ உபதேசம் பண்ணாதே.

— எவர்ஹார்டு

கவிஞர் சொ.சொ.மீ. சுந்தரம் பெரியபுராணச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார் திருப்பணிச் செம்மல் கா. சுப்பிரமணியம், பாம்பன் மெர்க்கண்டைல்ஸ் வி. சுந்தரமூர்த்தி, அரிசி ஆலை அதிபர் மா. மாரியப்பன் ஆகியோர் பாராட்டுப் பெற்றனர். பேராசிரியர் சொ. சொ. மீ. சுந்தரம் புலவர் நி.சி. சுந்தரராமன், பேராசிரியர் ஈ. வே மாரியப்பன், புலவர் க. சண்முகம் ஆகியோர் பாராட்டிப் பேசினர்.

☆ மதுரைக் காமராசர் பல்கலைக் கழக சைவசித்தாந்த தத்துவத் துறை சார்பில் ஏ.பி.சி. வீரபாகு அறக்கட்டளைச் சொற்பொழிவு 12-4-99 அன்று நடைபெற்றது. பொறியர் பி.டி.ஆர். கமலத்தியாகராசன் தலைமையில் திருச்சி நேஷனல் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் நாகராசன் 'வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்' என்ற பொருளில் சொற்பொழிவாற்றினார்.

☆ சமுதாய நல்லிணக்கத்திற்கும், மேம்பாட்டிற்கும் பணியாற்றுபவர்களுள் சிறந்தவர்களுக்கென வழங்கப் பெறும் 'விகாஸ்ரத்தன்' விருதினைப் பெற்ற பிள்ளையார்பட்டி திருக்கோயில் தலைமை அர்ச்சகர் டாக்டர் கி. பிச்சை சிவாசாரியார் அவர்களுக்கு பிள்ளையார்பட்டி அருள்மிகு கற்பகவிநாயகர் கோயில் நகரத்தார்கள் 15-4-99 அன்று பாராட்டு விழா நிகழ்த்தினர். டாக்டர் கி. பிச்சை சிவாச்சாரியரின் பணி மேலும் சிறந்திட 'உழவாரம்' வாழ்த்துகிறது.

☆ சிவகாசி சிவனடியார் அறநெறிக் கழக சார்பில் திருமுறை முற்றோதல் விழா மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயில் வடக்காடி வீதியில் உள்ள திருவள்ளுவர் கழகத்தில் 17-4-99 அன்று நடைபெற்றது. புலவர் தா. குருசாமி தேசிகர், வயலூர் திருஞானசம்பந்த ஓதுவார், கயிலை சோமசுந்தர ஓதுவார் ஆகியோர் திருமுறை விண்ணப்பம் நிகழ்த்தினர். இயல் இசை வித்தகர் P.T.R. கமலதியாகராஜன் விழாவைத் துவக்கி வைக்க டாக்டர் கு. சுந்தரமூர்த்தி திருமுறை விளக்கமளித்தார். பிற்பகல் மாகேஸ்வரபூஜை நடைபெற்றது. திருமுறைப் புரவலர் உழவாரம் பெருமைதரு ஆசிரியர் M. கண்ணப்பசெட்டியார், பாம்பன் மெர்க்க்ண்டைல்ஸ் வி. திருஞானம், சிவகாசி P. பரமசிவம் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். 18-4-99 அன்று திருஏடகம் அருள்மிகு ஏடகநாதர் திருக்கோயிலில் திருமுறை முற்றோதுதல் விழா நடைபெற்றது. திருக்கோயில் செயல் அலுவலர். M. கணேசன், பரம்பரை அறங்காவலர் S.L. சேவுகன் செட்டியார் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

---

முட்டாள்தனத்தைப் போக்க மருந்தே கிடையாது. -ஜப்பான்

★ திருமுறை இசைத்தமிழ் (இசைவழிபாடு) விழா சார்பாக மதுரைத் திருவள்ளுவர் கழகத்தில் 16-4-99 அன்று திருமுறை இசைபெருவிழா நடைபெற்றது. தா. குருசாமி தேசிகர் வரவேற்றார். திருக்குறள் செம்மல் ந. மணிமொழியன் தலைமை தாங்கினார். அசோக்பவன் உரிமையாளர் பட்டாபிராமன், ஓய்வுபெற்ற வருமானவரி ஆணையாளர் மோகன் காந்தி, கயிலை மு. கண்ணப்ப செட்டியார் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்புரை வழங்கினர். பழனி ப. சண்முகசுந்தர தேசிகர், G. வெங்கடேசன் குழுவினரின் திருமுறை இசை நிகழ்ந்தது.

★ கோயில்பட்டி அப்பர் அடிகள் திருக்கூட்டத்தின் 40ஆவது சிவாலய உழவாரப்பணி திருநெல்வேலி நெல்லையப்பர் திருக்கோயிலில் 18-4-99 அன்று சிறப்பாக நடை பெற்றது.

★ மதுரைத் திருவள்ளுவர் கழகத்தில் சிவநெறிச்செம்மல் அமரர் இரா. அழகியநம்பி நிறுவிய அறக்கட்டளை சார்பில் டாக்கர் இராமசாமிப்பிள்ளை நினைவுச் சித்தாந்த விரிவுரை விழா ஏப்ரல் 16, 17, 18 தேதிகளில் நடைபெற்றது. ம.அ. இராமகிருட்டிணன் தொடக்கவுரை ஆற்றினார். புலவர் சுப. இராமச்சந்திரன் வரவேற்க வ. முருகையாபிள்ளை அறிமுகவுரை நிகழ்த்தினார். முனைவர் ச. கங்காதரன் 'இறைவன்' 'மனிதன்' 'உலகம்' என்ற தலைப்புகளில் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார்.

★ திருக்குடந்தை திருமுறை மன்றத்தின் சார்பில் தேவாரத் திருமுறை சிறப்பு இன்னிசை விழா 18-4-99 அன்று நடைபெற்றது. கோயில்கன்றாப்பூர் மு. சந்திரசேகரன் தேசிகர் திருமுறை இசை நிகழ்த்தினார்.

★ காஞ்சிபுரம் திருமுறை மன்றத்தின் 20-ஆம் ஆண்டுத் தொடக்க விழா 25-4-99 அன்று சிறப்பாக நடைபெற்றது. திருப்போரூர் ஆதீனம் தவத்திரு சிதம்பர சிவஞான சுவாமிகள் அருட் தலைமை ஏற்று ஆசி வழங்கினார்கள். கலைமாமணி ஆ. விநாயக முதலியார் இறைவணக்கம் பாட புலவர் சார. சகந்நாதன் வரவேற்றார். சு. சதாசிவம் ஆண்டறிக்கை வாசித்தார். திருமுறை ஒப்புவித்தல் போட்டியில் பரிசுபெற்ற மாணவ மாணவியருக்கு பரிசுகள் வழங்கப்பட்டன. டாக்டர் ஔவை நடராசன் தலைமையில் கருத்தரங்கமும், குடந்தை V. இலட்சுமணன், தருமபுரம் S. ஞானப்பிரகாசம், திருத்தணி N. சுவாமிநாதன் ஆகியோரின் தேவார இசையும் நிகழ்ந்தன.

★ திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் சிவ ஞான மாபாடியம் அருளிச்செய்த தவத்திரு மாதவச் சிவஞான முனிவர் சித்திரை ஆயில்யத் திருநாள் சிறப்பு வழிபாட்டு விழா 24-4-99 அன்று சுவாமிகள் தோன்றிய விக்கிரமசிங்கபுரம், துறவுநிலை பெற்ற சுசீந் திரம், நெடுநாள் தங்கியிருந்த காஞ்சிபுரம், சிவனடி சேர்ந்ததிருவாவடு துறை ஆகிய நான்கு திருத்தலங்களிலும் சிறப்பாக நடைபெற்றது. 'சித்தாந்தப் பட விளக்கம்' என்ற விழா மலர் வெளியிடப் பெற்றது. அறிஞர் பெருமக்களின் சொற்பொழிவுகள், சிறப்பு ஆராதனைகள் நிகழ்த்தப் பெற்றன.

★ ஸ்ரீமத் மாதவச் சிவஞான முனிவர் 215 ஆவது குருபூஜை விழா திருநெல்வேலி டவுன் சிவநெறிக் கழகத்தினரால் ஏப்ரல் 23, 24 தேதிகளில் சிறப்பாக நிகழ்த்தப் பெற்றது. தெற்குமடம், சிவஸ்ரீ வித்யா சங்கர சிவாசாரிய சுவாமிகள், செங்கோல் மட ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ கல்யாண சுந்தர சத்திய ஞான பண்டார சந்நிதிகள் ஆகி யோர் தலைமை ஏற்றுஆசி வழங்கினர். சிவ. காந்தி, க. திருஞான சம்பந்தம், S. குஞ்சிதபாதம், M.S. சண்முகம், ச. ரத்னவேலன் ஆகியோர் சிறப்புரை நிகழ்த்தினர். செயலர் A. நம்பிராஜபிள்ளை நன்றி கூறினார்.

★ கடந்த 12 ஆண்டுகளாக விக்கிரமசிங்கபுரத்தில் நடை பெற்றுவரும் 15 நாள் இலவச சைவ சித்தாந்தப் பயிற்சி வகுப்பு கள் இவ்வாண்டு மே 7 முதல் 21 வரை PLWA பள்ளியில் நடைபெற உள்ளன. தமிழ்நாடு முழுவதிலுமிருந்து சுமார் 50 பேர் வரை ஆண்டு தோறும் இவ்வகுப்புகளில் கலந்து கொண்டு பயனடைந்து வருகின் றனர். பேராசிரியர் முனைவர் ஆ. ஆனந்தராசன், முனைவர் ச. கங்காதரன், முனைவர் கோமதி சூரியமூர்த்தி, முனைவர் வை. இரத்தினசபாபதி, முனைவர் டி.பி. சித்தலிங்கையா, முனைவர் ர. வையாபுரி, தூத்துக்குடி சண்முகவேல் ஆகியோர் வகுப்புகளை நடத்த உள்ளனர். பாளையங்கோட்டை சைவசித்தாந்தச் செம்மல் சி.சு. மணி இவ்வகுப்பினை நெறிப்படுத்துகிறார். முழுவதும் இலவச மாக நடத்தப் பெற்றுவரும் இவ்வகுப்புகளுக்கு ஆகும் செலவுகளுக்கு நன்கொடை அளிக்க விரும்புபவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பலாம்.

**முகவரி :** தலைவர், சைவ நெறிக்கழகம்,
245, சந்நிதித் தெரு, விக்கிரமசிங்கபுரம்— 627 425

---

பெரியோர்களின் குறைகளே முட்டாள்களின் ஆறுதல்.

—டிஸ்ரேலி



* திருப்பரங்குன்றம் அ/மி சுப்பிரமணிய சுவாமி திருக்கோவிலைச்சார்ந்த திருநகர் ஸ்ரீசித்தி விநாயகர் திருக்கோவில் வளாகத்தில் சைவ சமய ஆசார்யர்கள் ஸ்ரீ திருஞானசம்பந்தர், ஸ்ரீதிருநாவுக்கரசர், ஸ்ரீசுந்தரர், ஸ்ரீ மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் பெருமக்கள் திருவுருவச்சிலை நூதன பிரதிஷ்டை விழா முன்னாள் வீட்டு வசதி வாரியத் தலைவர் அமரர் C.S. குமாரசாமிபிள்ளை துணைவியார் திருமதி கோமதி அம்மாள் மற்றும் அவருடைய மருகர் சிவநெறிச் செல்வர் K.C. பரமசிவம்பிள்ளை (பாரத ஸ்டேட் வங்கி ஓய்வு பெற்ற முதன்மைக் காசாளர்) திருமதி. கோதை நாச்சியார் தம்பதியர் உபயமாக 22-4-99 அன்று காலையில் சிறப்புற நடைபெற்றது. இவ்விழாவை இந்து சமய அறநிலையத்துறை உதவியாளரும்; நிர்வாக அதிகாரியுமாகிய திரு. புகழேந்திரன் முன்னிலை வகித்து சிறப்புற நிகழ்த்துவித்தார். ஸ்ரீகந்தகுரு வித்யாலய நிறுவனரும் சிவாகமச் செல்வருமாகிய சிவத்திரு. இராஜாபட்டர் ஆலோசனையின்படி சிவத்திரு. உமாபதி குருக்கள் குழுவினர் சிவாகம முறையில் சிறப்புற பிரதிஷ்டையை நிகழ்த்தினர். பண்ணிசைச் செல்வர் மதுரை T. A. திருஞானசம்பந்த ஓதுவார் திருமுறை இசை வழங்கினார். மதுரைப் பன்னிரு திருமுறை மன்ற துணைச்செயலரும் 'உழவாரம்' பதிப்பாளருமாகிய திரு. C.S. சொக்கலிங்கம்பிள்ளை, திருநகர் திருமுறை மன்றத்தலைவர் திரு. செல்வவிநாயகம், சைவ ஆதீனச் சீடர்கள் குழு அமைப்பாளர்கள் திரு S. ஆவுடையப்பபிள்ளை, சிவபூஜைச் செம்மல் புலியூர் திரு. சுப்பிரமணியம்; திருநகர் சைவப் பேரவை தலைவர் திருமுத்துக் காமாட்சியாபிள்ளை மற்றும் பலர் கலந்து கொண்டு சமயாச்சாரியார் திருவருள் பெற்றனர்.




1999
மே
மலர் 14
இதழ் 10

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

## நமது சிந்தனைக்கு

குணங்கள் கூறியுங் குற்றங்கள் பரவியுங்
குரைகழல் அடிசேரக்
கணங்கள் பாடவுங் கண்டவர் பரவவுங்
கருத்தறிந் தவர்மேய
மணங்கொள் பூம்பொழில் அரிசிலின்
வடகரை வருபுனல் மாகாளம்
வணங்கும் உள்ளமோடு அணையவல் லார்களை
வல்வினை அடையாவே.

—திருஞானசம்பந்தர்

பெருமானது ஒலிக்கும் வீரக் கழலை அணிந்த திருவடிகளை அடையும் பொருட்டு அவருடைய கலியாண குணங்களைச் சொல்லியும் தம்முடைய குற்றங்களை விரித்துக்கூறியும் தேவ மனித கணங்கள் பாடவும், உண்மை கண்டவர்கள், மெய்ஞ்ஞானிகள் துதிக்கவும் அவரவர் கருத்தை அறிந்து அதற்குத்தக அருள்பவ ராகிய எம்பெருமான் அமர்ந்த, மணத்தைக்கொண்ட பூஞ்சோலைகளை உடையதும் அரிசிலாற்றின் வடகரையில் உள்ளதும் நீர்வளம் மிக்கதும் ஆன திருமாகாளத்தை வழிபடும் மனத்தோடு சென்று அடைபவர்களை வலிய தீவினைகள் சேரமாட்டா.

---

உடற்பயிற்சி என்பது களைப்புண்டாகாதபடி உழைத்தல்.

—ஜான்ஸன்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

### சிவஞானபாடியம் அருளிச்செய்த

# தவத்திரு மாதவச்சிவஞான முனிவர் அருள்வரலாறு

## (காலம் கி.பி 1753-1785)

திருநெல்வேலி மாவட்டம் விக்கிரமசிங்கபுரம் திருத்தலத்தில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் ஆனந்தக் கூத்தருக்கும் மயிலம்மையாருக்கும் ஒரு சத்புத்திரர் திரு அவதாரம் செய்தனர். முக்களாலிங்கர் எனும் பிள்ளைத் திருநாமத்துடன் வளர்ந்து, தம் ஐந்தாம் பிராயத்தில் திருவாவடு துறை ஆதினத்தில் இருந்து யாத்திரை செய்து கொண்டு அங்கு வந்த முனிவர்களைத் தரிசித்து, தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று அமுது செய்து வைத்தனர். முக்களாலிங்கர் திருவாவடுதுறை சென்று சிவஞானோபதேசம் பெற்றுச் சிவப்பணி செய்வதில் தமக்கிருந்த விருப்பத்தைப் பெற்றோர்களிடம் தெரிவித்து, அவர்களின் அனுமதியுடன் ஆதீனத்து முனிவர்களுடன் யாத்திரை மேற்கொண்டு பல தலங்களைத் தரிசித்து சுசீந்திரம் அடைந்து, அது சமயம் ஆதீனத்துக் கிளைமடத்தில் எழுந்தருளி இருந்த சின்னப்பட்டம் பேரூர்வேலப்ப தேசிகரை தரிசித்து வணங்கி, ஞானதேசிகரிடத்தே சைவ சந்நியாசமும். சிவதீட்சையும் சிவஞான யோகிகள் என்னும் தீட்சா நாமமும் பெற்றார். மெய்கண்ட சாத்திரங் களைக் கேட்டருளினார். வடமொழிக் கடலும், தென்மொழிக் கடலும் முற்றொருங்குணர்ந்தார்.

பின்பு பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவாவடுதுறை எழுந்தருளி, பத்தாவது குரு மகாசந்நிதானமாக வீற்றிருந்து அருளிய ஸ்ரீலஸ்ரீ வேலப்ப தேசிக மூர்த்திகள் அவர்களை தரிசித்து சிறிது காலம் தங்கி குருலிங்க சங்கம சேவை செய்து வந்தார்கள். பின்பு காஞ்சிபுரம் எழுந்தருளி ஆதீனத்துக் கிளைமடத்தில் பலகாலம் தங்கி யிருந்து பல நூல்களை அருளிச் செய்தார்கள்.

---

சுத்தமான தண்ணீரே உலகின் முதன்மையான மருந்து.
—செக்கோஸ்லோவேக்கியா

யோகிகள், ஸ்ரீமெய்கண்டதேவர் மொழிபெயர்த்தருளிய சிவ ஞான போதத்திற்கு திராவிட மாபாடியம் எனப் பெயர் பெற்ற விருத்தியுரையும் மற்றும் சாத்திர நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள், இலக்கண நூல்கள், இலக்கிய நூல்கள், கண்டன நூல்கள், மற்றும் காஞ்சி புராணம் முதலிய 28 நூல்களைச் செய்தருளினார்கள்.

இவ்வண்ணம் தவத்திரு மாதவச் சிவஞான முனிவர், இருமொழிக்கும் செய்த தொண்டுகள் பல. திருவாவடுதுறை ஆதீனத்தின் ஞானக் கண்ணாக செந்தமிழ்க் காவலராக, இலக்கண வரம்பினையும் சமய வரம்பினையும் பாதுகாக்கும் சிவஞான வள்ளலாகத் திகழ்ந்து திருவாவடுதுறையில் விசுவாவசு ஆண்டு சித்திரை மாதம் ஆயிலியம் திருநாளில் (17.4.1785) ஞாயிற்றுக்கிழமை சுத்தாத்வைத சிவானந்தப் பெருவாழ்வு அடைந்தார்கள்.

அவர்களின் திருவடிகளைப் போற்றி உய்வோமாக.

## வைகாசி மாத அடியவர் வழிபாடு

### நமிநந்தி அடிகள் (20—5—99)

''நக்கமணர் வெள்க நமிநந்தி ஆரூரர்க்கு
மிக்கபுனலாலே விளக்கெரித்தார்—தக்கமனத்து
எண்ணிய எண்ணியாங்கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்''

திருவாரூர் அறநெறியண்ணல் திருக்கோயிலில் சிவப்பணி செய்தவர் நமிநந்தியடிகள். சிவனது அடியார்கள் என்றும் சிவபெருமானின் பாதுகாப்புப் பெறுவர் என்பதை எள்ளி நகையாடிய சமணர்கள் அறிவு பெறும் வண்ணம் திருக்கோயில் திருக்குள நீரால் திருக்கோயிலில் விளக்கெரித்தார். குருபூசைநாள் வைகாசித் திங்கள் பூசம் நன்னாள்.

### சோமாசிமாற நாயனார் (21—5—99)

''எத்தன்மைய ராயினும் ஈசனுக் கன்பர் என்றால்
அத்தன்மையர் தாம் நம்மை யாள்பவ ரென்று கொள்வார்
சித்தந் தெளியச் சிவனஞ்செழுத் தோதும் வாய்மை
நித்தந் நியம மெனப் போற்று நெறியினின்றார்''

---

உடற்பயிற்சி என்பது களைப்புண்டாகாதபடி உழைத்தல்.

— ஜான்ஸன்

மக்கள் நன்மைக்காக யாகங்கள் வழுவாது செய்யும் சிவத் தொண்டு செய்து வந்தவர் சோமாசி மாறர் என்னும் திருவம்பர் மறையவர்.

''யாக யக்ஞங்களுக்கு பாரத தேசம் புகழ்பெற்றது. இங்கு நடைபெறும் யாக ஹோமங்களில் அளிக்கப்படும் திரவியங்கள் தேவர் களுக்கு அமிர்தமாகப் போய்ச் சேர்கிறது என்பார்கள்'' - ''நன்றி. தினமலர் - ஆன்மீகம் 23-4-99'' இத்தகைய யாகப் பயன் யாவரும் பெற பணிசெய்து சிவப்பேறு பெற்றார். குருபூசை நாள் வைகாசித் திங்கள் ''ஆயில்யம்'' நன்னாள்.

## திருஞானசம்பந்த நாயனார் (1—6—99)

''சைவநெறியை'' மக்கள் முழுமையாக ஏற்றுக் கொள்ளும் வழி காட்டியவர் ஞானசம்பந்த நாயனார். சைவசமயாச்சாரியர் நால்வரில் வயதில் இளையவர்; சிவபெருமானின் திருவருட் கருணையை முழு மையாகப் பெற்றவர். இறைவனது திருவுளக் குறிப்பினை திருக் கடைக்காப்பு என்ற தேவாரங்களினால் மக்களுக்கு அறிவித்து பயன டையச் செய்தவர். இன்றும் காண்கிறோம், 'திருநீற்றுப்பதிகம்' 'இடர் களையும் பதிகம்' 'நமச்சிவாயப் பதிகம்' கோளறு பதிகம் இன்னும் பலப்பல பதிகங்களின் பலன்களை. மதுரை திருநகர் திருக்கோயில் வளாகத்தில்'நால்வர்' திருமேனிகளை எழுந்தருளச்செய்த சித்திரைத் திங்கள்(பிரமாதிவருடம்) குருவாரம் சப்தமிதிதி நன்னாளில் நிகழ்த்திய பெரியபுராண சொற்பொழிவில், சொற்பொழிவாளர் திருஞான சம்பந்தப் பெருமான் ஆணையிட்டுச் கூறிய பதிகங்களின்பயன்களைப் பெற்றவர்கள்,திருநாவுக்கரசு நாயனார் சைவநெறியைப் பின்பற்று வோர், மன உறுதியுடையராயும், மக்கட்தொண்டு செய்வோராவதை யும், சுந்தரமூர்த்தி நாயனாருக்காகப் பல்வேறு அற்புதங்களையும் இறைவன் அளித்ததையும், மாணிக்கவாசகப் பெருமானுக்காக ஆல வாய் ஆகிய மதுரையில் குதிரைச் சேவகனாக கூலியாளாக வந்தது வும், மற்றையவையும் பற்றி அவையோர் உணர்ச்சி பெறக்கூறி, ஞானசம்பந்த நாயனாரை வழிபடுதல், ''நால்வரை'' வழிபடுதல், 63 நாயன்மார் வழிபாடு வாழ்க்கையில் எத்தகைய உயர்ந்த இம்மைப் பயன்களையும், மறுமைப் பயன்களையுமளிக்கும் எனத் திடம்படக் கூறினார்.

---

சுத்தமான தண்ணீரே உலகின் முதன்மையான மருந்து.

— செக்கோஸ்லோவேக்கியா

''வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனித வாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்
பாதமலர் தலைக் கொண்டு திருத்தொண்டு பரவு வாம்''.

ஞானசம்பந்த நாயனார் சிவசோதியிற் கலந்த குருபூசை நாள் வைகாசித்திங்கள் மூலம் நன்னாளாகும்.

## திருநீலக்கண்ட யாழ்ப்பாண நாயனார் (1—6—99)

''அந்தரத் தெழுந்த வோசை ''யன்பினிற்பாணர் பாடும்
சந்தயாழ் தரையிற் சீதந்தாக்கில் ''வீக்கழியு'' மென்று
''சுந்தரப் பலகைமுன் நீரிடு'' மெனத் தொண்டரிட்டார்
செந்தமிழ்ப் பாணனாருந் திருவருள் பெற்றுச் சேர்ந்தார்

திருஎருக்கத்தம் புலியூரில் பாணர் வகுப்பில் தோன்றியவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர். திருஞானசம்பந்த நாயனாரின் பாடல் களுக்கு விருப்புடன் யாழ்வாசித்து தொண்டு செய்தவர். குருபூசை நாள் வைகாசித்திங்கள் மூலம் நன்னாள். ஞானசம்பந்தர் திருமண நன்னாளில் சிவஜோதியில் கலக்கும் பேறு பெற்றவர்.

## திருநீலநக்க நாயனார் (1—6—99)

''வேதவுள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையு மவரடி யாரையு நயந்து
பாத வர்ச்சனை புரிவதும் பணிவது'' மென்றே.
காத லாலவை யிரண்டுமே செய்கருத் துடையார்'!

வேணி நாதராகிய சிவபெருமானின் அடியார்களை வணங்கும் சிவத்தொண்டு செய்தவர், சாத்தமங்கலம் மறையவராகிய திருநீல நக்கர். ஞானசம்பந்தர் திருநீலநக்கர் இல்லத்திற்கு எழுந்தருளிய போது உடன் வந்தபாணர் வகுப்பினராகிய திருநீலகண்ட யாழ்ப் பாணரும் அவரது மனைவியாரும், தங்குவதற்கு, தமது இல்லத் தின் நடுவில் அமைந்த, மறையவர் மிகப்புனித மெனக்கருதிடும் யாக சாலைப் பகுதியை, ஒதுக்கிக் கொடுத்தவர். சைவநெறியின் மிகப் பெரிய கொள்கையான, மனிதரில் குலத்தினால், தொழிலினால், வேற்றுமை, எதுவும் இல்லை என்பதை நிலை நாட்டியவர். குரு பூசை நாள் வைகாசித்திங்கள் மூலம் நன்னாள். சிவசோதியிற்கலந்த பேறு பெற்றவர்.

---

**மனோ தைரியம் இன்றேல் வாய்மை இல்லை. வாய்மை இன்றேல் மற்ற அறங்கள் இல்லை. —ஸ்காட்**

முருகநாயனார் (1—6—99)

''கொண்டு வந்து தனியிடத்திலிருந்து கோக்குங் கோவைகளும்
இண்டைச் சுருக்குந்தாமமுட னிணைக்கும் வாச மாலைகளும்
தண்டிற் கட்டுங் கண்ணிகளுந் தாளிற் பிணைக்கும் பிணையல்களும்
நுண்டா திறைக்குந் தொடையல்களுஞ் சமைத்து நுடங்கு நூன்மார்பர்''

மறையவர் குலத்துதித்தமுருகர், திருப்புகலூர்திருக்கோயிலுக்கு மலர்வழங்கும் சிவத்தொண்டு செய்தவர். திருஞானசம்பந்தருக்கும் அவருடன் சார்ந்த அடியார் குழுவினருக்கும் மாகேசுவரபூசை செய்தவர். குருபூசை நாள் வைகாசித் திங்கள் மூலம் நன்னாள். சிவசோதியிற் கலந்து பேறு பெற்றவர்.

கழற்சிங்கநாயனார் (11—6—99)

''கட்டிய வுடைவா டன்னை யுருவியக் கமழ்வாசப்பூத்
தொட்டுமுன் னெடுத்த கையாம் முற்படத்துணிப்ப தென்று
பட்டமு மணிந்து காதல் பயில் பெருந்தேவி யான
மட்டவிழ் குழலாள் செங்கை வளையொடுந் துணித்தா ரன்றே''

கழற்சிங்கர் பல்லவ மன்னர், சிவத்தொண்டு பல புரிபவர். சிவ அபராதம் யாதொருவர் செய்திடினும் தண்டனைக்குரியவரே என்பதில் உறுதியுடையவர். மனுநீதிச் சோழன் நீதிக்காக மகனைத் தண்டிக்க முன்வந்தவர். கழற்சிங்கர் சிவ அபராதத் திற்காக மனைவியைத் தண்டித்தவர். குருபூசை நாள் வைகாசித்திங்கள் பரணி நன்னாள்.

நம்பியாண்டார் நம்பி — குருபூசை நாள் - 19-5-99
சேக்கிழார் — குருபூசை நாள் - 20-5-99

இக்குருபூசை நாட்களில் மதுரை பன்னிரு திருமுறை மன்றத்தினர் அ/மி. மீனாக்ஷிசுந்தரேசுவரர் திருக்கோவிலில் வழிபாடும் மன்றத்தில், தமிழருச்சனை பெரியபுராண சிந்தனையும் மேற்கொள்வர்.

— C. S. சொக்கலிங்கம்

---

உண்மை எது, பொய் எது என்பதை உன் நெஞ்சு அறியும்.
—வடமொழி சுலோகம்

## தலவரலாறு

# திருப்பராய்த்துறை

சோழநாட்டு (தென்கரை)த் தலம்.

திருச்சி-ஈரோடு இருப்புப் பாதையில் உள்ளது. எலமனூர் புகைவண்டி நிலையத்தில் இறங்கிச் செல்லலாம். திருச்சியிலிருந்து-கரூர், குளித்தலை செல்லும் பேருந்துச் சாலையில் சென்று இத் தலத்தை அடையலாம்.

பராய் மரக்காட்டில் இறைவன் எழுந்தருளியிருப்பதால் இத் தலம் 'பராய்த்துறை' எனப்பெற்றது. காவிரிக் கரைத்தலம். இத்தலத் திற்குத் 'தாருகாவனம்' என்று பெயர் (பராய் மரம், சமஸ்கிருதத்தில் தாருகாவிருக்ஷம் எனப்படும்.)

இறைவன் பிட்சாடனராய்ச் சென்று தாருகாவனத்து முனிவர் களின் செருக்கை அகற்றி அவர்க்கு அருள்புரிந்த சிறப்பையுடைய தலம். இந்திரன், குபேரன், சப்தரிஷிகள் ஆகியோர் வழிபட்டுப் பேறு பெற்ற தலம்.

இறைவன் —தாருகாவனேஸ்வரர், பராய்த்துறைநாதர்,
இறைவி —ஹேமவர்ணாம்பாள், பசும்பொன்மயிலாம்பாள்
தலமரம் —பராய் மரம் (பிராகாரத்தில் உள்ளது).
தீர்த்தம் —காவிரி

சம்பந்தர், அப்பர் ஆகியோர் பாடல் பெற்ற பதி.

முன்மண்டப வாயில் மேலே ரிஷபாரூடர் சிற்பம் சுதையால் ஆனது உள்ளது. உள்கோபுரம் ஏழு நிலைகளையுடையது. இடப் பால் குளம் உள்ளது. வலப்பால் உள்ள கல் மண்டபத்தில் (வசந்த மண்டபத்தில்) விவேகாநந்தர் தொடக்கப்பள்ளி நடைபெறுகின்றது. முகப்பில் விநாயகர் காட்சி தருகிறார்.

செப்புக் கவசமிட்ட கொடிமரம். இதுவும் பலிபீடமும் நந்தியும் சேர்ந்து ஒரு மண்டபத்தில் உள்ளன. இது நந்தி மண்டபம் எனப் படும். இத்தூண்களில் சம்பந்தர், அப்பர், மாணிக்கவாசகர் உருவங் களும், திருப்பணி செய்த செட்டியாரின் உருவமும் உள்ளன.

வெளிப்பிராகாரத்தில் விநாயகரும் தண்டபாணியும் உள்ளனர். அடுத்துள்ள கோபுரம் ஐந்து நிலைகளையுடையது. உள்ளே நுழைந் ததும் நேரே மூலவர் சந்நிதி தெரிகின்றது. கிழக்கு நோக்கியது

---

ஒவ்வொரு உள்ளத்திலும் நரகமும் உண்டு. சுவர்க்கமும் உண்டு.

—ஆஸ்கார் ஒயில்டு

உள்சுற்றில் வலம்புரி விநாயகரும், சப்தகன்னியரும், அறுபத்து மூவரும் [திருமேனிகளும்] உள்ளனர். அடுத்து சோமாஸ்கந்தர், மகாகணபதி, பஞ்சபூத லிங்கங்கள், ஆறுமுகர், பிட்சாடனர், பிரம்மா துர்க்கை, கஜலட்சுமி, மயிலேறிப் பன்னிரு கையும் கொண்டு திகழும் சண்முகர் ஆகியோர் சந்நிதிகள் உள்ளன. நவக்கிரகங்களுள் சனீஸ்வரனுக்கு மட்டும் காக்கை வாகனமுள்ளது. பைரவரும் உள்ளார்.

கோஷ்டமூர்த்தமாக, விநாயகரும்: தட்சிணாமூர்த்தியும், இலிங் கோற்பவர் இடத்தில் அர்த்தநாரீஸ்வரரும், பிரம்மாவும், துர்க்கையும் உள்ளனர். சண்டேசுவரர் சந்நிதி உள்ளது. தட்சிணாமூர்த்தி சந்நிதி தனி விமானமாக உள்ளது - சிங்கங்கள் தாங்கி நிற்கின்ற அழகிய வேலைப்பாடமைந்த தூண்கள் — பரந்த கல்லாலமர வேலைப்பாடு.

நடராசர் சந்நிதி உள்ளது. துவாரபாலகர்களைத் தரிசித்து உள்சென்று மூலவரைத் தரிசிக்கலாம். மூலவர் அழகான திருமேனி அம்பாள் சந்நிதி தெற்கு நோக்கியது, அம்பாள் மண்டபத்தில் உள்ள முன்தூணில் ஊர்த்துவதாண்டவ சிற்பமும், எதிர்த் தூணில் காளியின் சிற்பமும் உள்ளன.

வைகாசி விசாகத்தில் பத்துநாள்களுக்குப் பெருவிழா நடை பெறுகின்றது. முதல் பராந்தக சோழன் காலத்தில் கட்டப்பட்ட இத் திருக்கோயில் பின்பு நாட்டுக்கோட்டை நகரத்தாரின் திருப்பணியும் பெற்றது. கல்வெட்டில் இத்தலம் ''உத்தம சீலிச் சதுர்வேதி மங் கலத்துத் திருப்பராய்த்துறை'' என்று குறிக்கப்படுகின்றது. இறை வன் பெயர் ''பராய்த்துறை மகாதேவர்'' என்றும், ''பராய்த்துறைப் பரமேஸ்வரன்'' என்றும் குறிக்கப்படுகின்றது.

ஐப்பசி துலா நீராடலும், அகண்ட காவிரியில் சென்று சுவாமி தீர்த்தம் கொடுப்பதும் விசேஷமானது. இத்தலத்தின் கீழ் எல்லை யில் சுவாமி சித்பவானந்தரின் இராமகிருஷ்ண தபோவனமும், மேல் எல்லையில் இராமகிருஷ்ண குடிலும் பள்ளிகளும் உள்ளன. 26—5—1940-ல் கும்பாபிஷேகம் நடந்துள்ளது.

---

**பேச்சில் தீமை கலந்துவிட்டால், மனத்திலும் தீமை கலந்து விடும்.**

**—ஸெனீகா**

# பதிகப் பெருவழி—66

## திருப்பராய்த்துறை

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

திருச்சிற்றம்பலம்

நீறுசேர்வதொர் மேனியர் நேரிழை
கூறுசேர்வதொர் கோலமாய்ப்
பாறுசேர்தலைக் கையர் பராய்த்துறை
ஆறு சேர்சடை அண்ணலே. 1

பராய்த்துறையில் வீற்றிருக்கும் அண்ணலாகிய ஈசன், திருவெண்ணீறு அணிந்த மேனியை உடையவர்; உமையவளைக் கூறாகக் கொண்ட வடிவத்தை உடையவர்; பருந்து கொத்தும் தலையாக உள்ள மண்டையோட்டினைக் கரத்தில் கொண்டு, கங்கையைச் சடையில் சேர்த்தவர். அப்பெருமானை ஏத்திப் பணிக என்பதாம்.

கந்தமாமலர்க் கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல் வைத்தவர்
பைந்தண் மாதவி சூழ்ந்த பராய்த்துறை
அந்தமில்ல அடிகளே. 2

நறுமண மலராகிய கொன்றை கமழும் சடையில் பெருகி வந்த கங்கையை வைத்தவர், மாதவி மலர்கள் சூழ்ந்த பராய்த்துறையில் அந்தம் அற்றவராய் விளங்கும் அடிகள் ஆவர்.

வேதர்வேதமெல் லாமுறையால்விரித்து
ஓதநின்ற ஒருவனார்
பாதிபெண்ணுரு வாவர் பராய்த்துறை
ஆதியாய அடிகளே. 3

வேதமாகவும், வேதம் யாவையும் விரித்த வராகவும், யாவராலும் ஓதிப் போற்றப்படும் ஒப்பற்ற ஒருவனாக விளங்கிப் பாதி பாகம் உமையவளின் வடிவத்தோடு கொண்டு அர்த்தநாரீசராக விளங்கு பவர், பராய்த்துறையில் திகழும் ஆதியாகிய அடிகள் ஆவர்.

---

படித்ததில் மறந்தது போக எஞ்சி நிற்பதே கல்வி.

— சர். ரிச்சர்டு லிவிங்ஸ்டன்

தோலுந்தம்மரை யாடை சுடர்விடு
நூலும் தாம்அணி மார்பினர்
பாலும்நெய்பயின்று ஆடுபராய்த்துறை
ஆல நிழல் அடிகளே. 4

புலித்தோலை அரையில் ஆடையாக உடுத்தி, முப்புரி நூல் அணிந்த மார்பினராய், ஆலமரத்தின் நிழலில் குரு மூர்த்தமாய் விளங்கும் அடிகள், பராய்த்துறையில் பாலும் நெய்யும் பூசனைப் பொருள்களாகச் சூடப்பெற்றுத் திகழ்பவர் ஆவர்.

விரவிநீறுமெய் பூசுவர் மேனிமேல்
இரவில் நின்றெரி ஆடுவர்
பரவினாரவர் வேதம் பராய்த்துறை
அரவம் ஆர்த்த அடிகளே. 5

திருநீறு மெய்யில் பூசி, மேனியின் மீது அரவத்தை உலவு மாறு செய்த அடிகள், இரவில் நெருப்பினைக் கரத்தில் ஏந்தி ஆடுவர், பராய்த் துறையில் மேவி வேதத்தை விரித்தவர் ஆவர்.

மறையும் ஓதுவர் மான்மறிக்கையினர்
கறைகொள்கண்டம் உடையவர்
பறையும்சங்கும் ஒலிசெய்பராய்த்துறை
அறைய நின்ற அடிகளே. 6

வேதம் விரிப்பவர்; மான் கையினர்; கறை தந்த நஞ்சருந்திய கண்டத்தை உடையவர்; வெற்றிச் சின்னமாகச் சங்கொலிக்கும் பராய்த்துறையில், மந்திரச் சொல்லாக மேவும் அடிகள் ஆவர்.

விடையும் ஏறுவர் வெண்பொடி பூசுவர்
சடையிற்கங்கை தரித்தவர்
படைகொள்வெண்மழு வாளர்பராய்த்துறை
அடையநின்ற அடிகளே. 7

பராய்த்துறை என்னும் திருத்தலத்தில் எங்குமாய் முழுமையாய் மேவிய அடிகள், இடப வாகனத்தில் ஏறும் பெருமான்; வெண்ணீறு

---

அறிவு பெற விரும்பினால், நாவை அடக்கும் அறிவைப் பெறுவாய்.
-லவேட்டர்

அணியும் பரமன்; சடையில் கங்கை தரித்த ஈசன். அவர், ஒளி பொருந்திய மழுவைப் படையாகக் கொண்டுள்ளவர்.

தருக்கின் மிக்க தசக்கிரிவன்றனை
நெருக்கினார் விரல் ஒன்றினால்
பருக்கினார் அவர் போலும் பராய்த்துறை
அருக்கன் றன்னை அடிகளே. 8

தருக்குற்ற இராவணனைத் தனது திருப்பாத விரலால் அடக்கி பின் அவன் செருக்கு அழிந்து பணிந்து போற்ற, வளமை செய்தவர் பராய்த்துறையில் விளங்கும் அடிகள்.

நாற்றமாமல ரானொடு மாலுமாய்த்
தோற்றமும்மறி யாதவர்
பாற்றினார் வினை யானபராய்த்துறை
ஆற்றல்மிக்க அடிகளே. 9

பிரமனும் திருமாலும் தேடியும் எத்தகைய காட்சியும் தோற்றம் பெறாதவராய் ஆற்றல் மிக்கவராய்ப் பராய்த்துறையில் மேவிய அடிகள், அடியவர்கள் வினைகளைச் சிதறுண்டு விலகுமாறு செய்பவர்.

திருவிலிச்சில தேரமணாதர்கள்
உருவிலாவுரை கொள்ளேலும்
பருவிலால்எயில் எய்துபராய்த் துறை
மருவினான்றனை வாழ்த்துமே. 10

திருவற்றவராகிய சில சமணர்களும் தேரர்களும் சொல்லும் உரை கொள்ளற்க. மேருமலையாகிய பருமையான வில்கொண்டு முப்புரம் எரித்து பராய்த்துறை மருவி விளங்கும் ஈசனைப் போற்றி வணங்குவீராக.

செல்வமல்கிய செல்வர்பராய்த்துறைச்
செல்வர்மேற்சிதை யாதன
செல்வன்ஞானசம் பந்தன செந்தமிழ்
செல்வமாம் இவை செப்பவே. 11

திருச்சிற்றம்பலம்

செல்வம் பெருகும் பராய்த்துறையின் செல்வனாகிய ஈசனைச் சிதைவுபடாத நிறைசெல்வமாகிய ஞானசம்பந்தன் செந்தமிழ்ப் பதிகத்தைச் சொல்ல செல்வம் பயக்கும்.-இம்மை நலனும் மறுமை நலனும் தரும் என்பதாம்.

## செய்திகள்

★ மதுரை பன்னிருதிருமுறை மன்ற அன்பர்கள் 2-5-99 அன்று வடநாட்டு திருத்தல யாத்திரை மேற்கொண்டனர். அன்று காலை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் திருமுறைகள் ஓதி யாத்திரை நலம்பெற விண்ணப்பம் செய்து, திருநகர் சைவ ஆதீன சீடர் குழுவினர் மற்றும் மன்ற அன்பர்கள் வழியனுப்பி வைத்தனர்.

★ 10-5-99 அன்று திருநாவுக்கரசர் குருபூஜை விழா மன்றத்தில் உழவாரம் புரவலர் கயிலைத் திரு. M. கண்ணப்பன் செட்டியார் உபயத்தில் சிறப்பாக நடைபெற்றது. காலையில் திருமுறை வாணர்கள் S.ரத்தினம்ஓதுவார், கயிலை A. சோமசுந்தர ஓதுவார், கு.மணிகண்டஓதுவார், அவினாசிநாதன், M. முத்துக்குமார் ஆகியோர் திருமுறை விண்ணப்பம்செய்யதமிழருச்சனைவழிபாடுகள் நிகழ்ந்தன பாகனேரிஅமரர் திரு. இராம.முத்துப்பழனியப்ப செட்டியார் திருமதி கண்ணாத்தாள் ஆச்சி அறக்கட்டளை சார்பில் மகேசுவர பூஜை நிகழ்ந்தது. மாலையில் மதுரை T.A. திருஞானசம்பந்த ஓதுவார் குழுவினரின் திருமுறை இன்னிசை நிகழ்ந்தது.

★ மதுரை திருநகர் அருள்மிகு சித்திவிநாயகர் திருக்கோயில் வளாகத்தில் அமைந்துள்ள, நால்வர் சந்நிதியில் திருநாவுக்கரசு நாயனார் குருபூசை வழிபாடு 10-5-99 காலையில் சிறப்பாக நடைபெற்றது. உமாபதி குருக்கள் சிறப்பு அபிஷேக அலங்கார வழிபாடுகளை நிகழ்த்தினார். திருநகர் சைவப்பேரவை தலைவர் முத்துக்காமாட்சியாபிள்ளை ஏற்பாடுகளைச் செய்திருந்தார். திருநகர் முதியோர் இல்லத்தில் மாகேசுவரபூஜை நிகழ்ந்தது.

★ ஆச்சாள்புரம் குருஞான சம்பந்தர் பணிமன்றத்தின் சார்பில் திருநாவுக்கரசர் குருபூசை விழாவும் உழவாரத் திருத்தொண்டும் 10-5-99 அன்று நடைபெற்றது. ஆலயக் கண்காணிப்பாளர் தி. திருலோகம் முன்னிலையில் முனைவர் த. அகரமுதல்வன் விரிவுரை நிகழ்த்தினார்.

---

புத்தகம் காலமென்ற பெருங்கடலில் எழுதிய கலங்கரை விளக்கு.

— இ.பி. விப்பல்

Regd. No : 004358 / 16 / 6 / AL / 85 / NT III dt : 26–9–85
UZHAVARAM (Monthly) Regd No. TN / MA HO 16/98
Licensed to Post Without Prepayment Under Licence No. 11/99
Posted at Madurai Bazaar Post Office on 16-5-99

உ
சிவமயம்
'என் கடன் பணிசெய்து கிடப்பதே'

**உழவாரம்**

ஆசிரியர் : மடடல்சுந்தரன்
துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A.
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு.
டோர் நிர் 12, திருநகர், மதுரை – 6.
☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம்,
B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

பெறுநர்

திரு R. திருநாவுக்கரசு,
7/2 சன்ச் புது தெரு,
T. T. நகர்,
அப்பர் அருளகம்,
காரைக்குடி
630 002



புரவலர் கட்டணம் ரூ 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-